[8th September 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : இங்கே செக்ரடேரியட், போர்டு ஆப் ரெவின்யூ, கலெக்டர்ஸ் ஆபிஸ், இலாகா தலைமைக் காரியாலயங்கள் முதலியவற்றைப் பற்றிதான் கேள்வி. மேலும் எனக்கு எங்கிருந்தும் இதுவரை புகார் வரவில்லை.

### *Police Dogs*

* 77 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1958 மார்ச் மாதத்தில் வட ஆற்காடு ஜில்லாவில், வேலூர், குடியாத்தம் நகரங்களுக்கு திருடு கண்டுபிடிப்பதற்காக போலீஸ் நாய்கள் அனுப்பிவைக்கப்பட்டனவா ?

(ஆ) அந்த நகரங்களில் திருடுபோன பொருள்களின் மதிப்பு எவ்வளவு ?

(இ) திருடுபோன பொருள்கள் யாவும் கண்டுபிடிக்கப்பட்டனவா ? திருடர்களும் கண்டு பிடிக்கப்பட்டனரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Rs. 14,400 in all.

(*c*) Properties worth Rs. 10,200 relating to the case of theft in Vellore have been recovered and the accused has been apprehended and convicted. There has been no recovery of property in the theft case at Gudiyatham as no clue is available.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister what principles the Government are following in the matter of sending these police dogs and is it the policy of the Government to send these dogs to aid investigation on application by the affected parties on payment of any money or not?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : That is not so. If the police require the services of these dogs for the purpose of investigation, these dogs are sent.

SRI P. S. CHINNADURAI : கோவை ஜில்லாவின் விசேஷ நிலைமையை உத்தேசித்து போலீஸ் நாய்களை அங்கே வைப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கோவை மாவட்டத்தைப்பற்றி நான் அவ்வளவு குறைவாக நினைக்கவில்லை. எல்லா ஜில்லாக்களிலும் குற்றங்கள் நடைபெறுகின்றன. அப்போது எங்கே நாய்கள் தேவைப்படுகின்றனவோ அங்கே அனுப்பி வைக்கப்படுகின்றன.

SRI A. A. RASHEED : Will it not help the police to detect more crimes quickly if the dogs are on the spot immediately?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : But it is not practicable to have many such dogs throughout the State. Whenever required, these dogs are sent as early as possible.

SRI K. B. S. MANI : இவ்வளவு உயர்தரமான வேலைகளுக்கு நாய்களைப் பழக்குகின்ற போலீஸ்காரருக்கு ஸ்பெஷல் அலவன்சு கொடுக்கப்படுகிறதா ? இல்லையென்றால் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இம்மாதிரி எத்தனையோ திறனுள்ள வேலைகள் செய்யப்படுகின்றன. அவைகளுக்குத் தக்கபடி கவனமும் செலுத்தப்படுகிறது.

8th September 1958]

SRI K. VINAYAKAM : Are there any instances brought to the notice of the Government, where the police dogs instead of catching the real culprits, have caught hold of innocent persons who have been let off afterwards in the judicial courts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Even men make mistakes and therefore it is but natural that the dogs also might make mistakes.

*Double Member Constituencies*

MR. SPEAKER : அடுத்த கேள்வி 78. கனம் நிதி அமைச்சர் பதிலளிப்பார்.

SRI K. B. S. MANI : ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர் ஸார். இந்தக் கேள்விக்கு சம்பந்தப்பட்ட விஷயம் இந்திய யூனியனால் முழு மனதாக ஆமோதித்து அதன்படி நடந்துவருகிறது. இந்திய அரசியல் சட்டத்தின் முக்கிய அம்சமாகும் இது. அத்துடன் இது யூனியன் முழுவதும் அமுல் நடத்த வேண்டிய காரியமும்கூட. இத்தகைய முக்கியமான விஷயத்தை மாற்றி அமைக்கவோ, திருத்தவோ இந்த சபைக்கு அதிகாரம் உண்டா? இல்லையா ? இல்லையானால் இந்தக் கேள்வியை இச்சபையில் அனுமதிப்பது சரியா ? சரி என்றால் எப்படி ?

MR. SPEAKER : இதை ஒன்றும் மாற்றச் சொல்லவில்லை. கேள்வியை ஸ்ரீ என். ஆர். தியாகராஜன் போடலாம்.

* 78 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

அசெம்பளி இரட்டை மெம்பர் தொகுதிகளை ஒற்றை மெம்பர் தொகுதிகளாக மாற்றியமைக்கும் உத்தேசம் சர்க்காருக்கு இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : 1960 வருஷத்துடன் இந்திய அரசியல் சட்டத்தில் கண்டபடி ரிசர்வ் ஸ்தானம் ஒதுக்கப்படுவது நின்று போகிறது. அதற்குப் பின்பு அதைத் தொடர்ந்து இரட்டை மெம்பர் தொகுதிகளையெல்லாம் ஒற்றை மெம்பர் தொகுதியாக்க இந்திய சர்க்காருக்கு நமது சர்க்கார் சிபார்சு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி யெல்லாம் மத்திய சர்க்கார் 1960-ம் வருஷத்திற்குள்ளாக யோசனை செய்வார்கள். அந்தக் காலத்தில் நம்மையும் கலந்து ஆலோசிப்பார்கள் என்று நினைக்கிறேன். எது சரியென்று தோன்றுகிறதோ அதை மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்யலாம். இந்தச் சபை ஏதாவது யோசனை சொன்னாலும் அதையும் அனுப்பி வைக்கலாம்.

SRI P. G. MANICKAM : அவ்வாறு இந்த ராஜ்ய சர்க்கார் சிபார்சு செய்யும் காலத்தில் ஹரிஜனங்களுக்கு ஹரிஜனங்கள் வோட்டுப் போடுவதற்கு வசதி ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று சிபார்சு செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : அந்தக் கேள்வி இப்போ து எப்படி எழும்?

SRI K. ANBAZHAGAN : இரட்டை அங்கத்தினர் தொகுதி சிறப்பாக இருக்கிறது என்று மத்திய அரசாங்கத்திற்கு சென்னை அரசாங்கம் தெரிவிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒவ்வொருவரும் ஒவ்வொரு அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள். தக்க சமயத்தில் எந்த அபிப்பிராயம் தெரிவிக்கவேண்டுமென்று முடிவு செய்தால் போதும்.